உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்
திங்கள் தமிழ்த் தாள்



மலர் : முப்பத்து மூன்று

**1960**



பத்திராசிரியர் :

புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் :

மு. நாராயணசாமி

**சைவ சித்தாந்த மகா சமாஜம்**

**14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4**

# உள்ளுறை

—

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 33—No. 1

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | விகாரி தை 1960 ஜனவரி | இதழ் 1

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி
சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4
ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜ அறிக்கை

நமது சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 54-ஆம் ஆண்டு நிறைவு விழாவும் மாநாடுகளும், வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களின் பேருதவியினால், 1959 டிசம்பர் 25, 26, 27-ஆம் தேதிகளிற் பெரிதும் சிறப்புற நடைபெற்றன. விழாவிற் பேசிய அறிஞர்கள் நாற்பதின்மர் சொற்பொழிவுகளும் 'சைவ சமயச் சொற்பொழிவுகள்' என்னும் தனி நூலாக, இத்தனை ஆண்டு விழாக்களில் இல்லாத சிறப்பு முறையில் அழகுற வெளியிடப் பெற்றுள்ளன. விழா நிகழ்ச்சியின் சிறப்புக் குறித்த முழு விவரங்களும் அடுத்த இதழில் வெளிவரும்.

---

## செய்திச் சுருக்கங்கள்

மதுரைச் சைவ சித்தாந்த சபை: மூன்றாம் ஆண்டு விழா 1959 டிசம்பர் 25, 26, 27 தேதிகளில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் சிறப்புற நடைபெற்றது. மதுரையாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் முதல் நாளிலும், சைவ சித்தாந்த சரபம் - சிவாகம ஞானபானு - சிவஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் ஏனைய இரண்டு நாட்களிலும் தலைமை தாங்கிச் சிறப்பித்தனர். ஸ்ரீ சைலப்ப ஓதுவா மூர்த்திகள் திருமுறை ஓதினர். திரு. R. நாராயண பிள்ளை வரவேற்புரையும், சிவஸ்ரீ கற்பூரசுந்தர சிவாச்சாரியார் திறப்புரையும், திரு. தி. சு. கோவிந்தசாமி அறிக்கை வாசித்தலும் நிகழ்த்தினர். சித்தாந்தப் புலவர் மாமணி - பாலகவி - வயிநாகரம் - திரு. வே. இராமநாதன் செட்டியார், சங்கரநயினர் கோவில்-சித்தாந்த பண்டித பூஷணம்-திரு. ஆ. ஈசுரமூர்த்தி பிள்ளை, பண்டித-அ. சிவசுப்பிரமணிய ஐயர், திரு. தி. சு. கோவிந்தசாமி, திரு. K. V. தியாகராஜ ஐயர் ஆகிய அறிஞர் பெருமக்கள் முறையே காரண காரியம், மாணிக்கவாசகர், சூத்திர விருத்தி, சமய பரிபாலனம், அருணகிரிநாதர் காட்டும் சித்தாந்தம் என்னும் பொருள்கள் பற்றிச்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாளியையுள் நாடு

மலர் 33 | விகாரி தை 1960 ஜனவரி | இதழ் 1

## சமய உணர்வு

(முருகவேள்)

ஒவ்வொரு தனி மனிதனின் வாழ்க்கையிலும், சில பல நிகழ்ச்சிகளோ அனுபவங்களோ இன்றியமையாமைகளோ ஏற்பட்டு, எங்ஙனமேனும் சமய வுணர்வையும் கடவுள் நம்பிக்கையையும் எழுப்பியே விடுகின்றன. முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒருபிடி சாம்பர் ஆகியே ஒழிகின்றனர். நிலைபேறுடையன போலத் தோன்றும் பொருள்களெல்லாம் முடிவில் நிலைபேறின்றி அழிந்து மறைந்துபோதலை நாம் நாடோறும் கண்டு வருகின்றோம். மனிதனின் செருக்கும், பெருமிதமும், முனைப்பும் நாளடைவில் தேய்ந்து மாய்ந்து போகின்றன. பெருத்த துன்பங்களும் நோய்களும் தொல்லைகளும் நேருங்காலெல்லாம், மனிதன் தன்னுடைய சிறுமையினை உணர வேண்டியவன் ஆகின்றான். எல்லோரையும் அடக்கியாண்டு, யாவும் தன்னாலேயே நடப்பனவாக்க் கருதித் தருக்கிக் களித்து நிற்கும் கயவனும், தன்கண் நிகழும் காம வெகுளி மயக்கங்களும் பிறவும் தன்னை ஆட்டிப் புடைத்து அலைப்பத் தான் அவற்றிற்கு அடங்கி நின்று, 'அந்தோ வினையே' என்று அழுங்கித் துன்பம் உழக்கின்றான். தன்னுடைய அறிவும் முயற்சியும் பிறவும் ஒரு வரையறைக்கு உட்பட்டனவே என்று உணர்கின்றபோது, வரையறைக்கு உட்

படாத அறிவும் ஆற்றலும் இன்பமும் உடைய பொருளின் துணையை அடைய மனிதன் பெரிதும் ஆவலுற்று அலை கின்றான்.

“ ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலக மெல்லாம்
வருவதும் வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும்! தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே ”

எனச் சிவஞானசித்தியார் கூறுதல்போல, பரந்துபட்ட இவ்வுலகியல் நிகழ்ச்சிகள் அனைத்தையும் அமைந்திருந்து கருதிக் காணுந்தோறும், இவற்றிற்கெல்லாம் காரணமாக இலங்கும் ஒரு முழுமுதற் பெரும்பொருளின் உண்மையினை நாம் உடன்படவே வேண்டியுள்ளது. நாம் நினைப்பது ஒன்றாக இருப்ப, நிகழ்வதோ பிறிதொன்றாக இருக் கின்றது. எத்துணை உயர்ந்த இன்பங்களை நுகர்வோனும், பின்னாளில் அவற்றினை வெறுத்தொதுக்கி இத்தகையதென்று கூற இயலாத வேறேதோ ஒரு பேரின்பத்தினை விழைந்து நின்று, உள்ளம் அமைதியற்று ஏக்கற்று அலமருகின்றான். நமக்குத் துணையென நம்மாற் கருதப் பெறுபவர்கள் பலரும் நம்மைக் கைவிட நேர்ந்த நிலையில், “ காய்கதிர்ச் செல்வனே! கள்வனோ என் கணவன் ?” எனக் கண்ணகியார் அரற்றியதே போல, ஏதோ ஒரு பெரும் பொருளின் துணை வேண்டி, வானை நோக்கி வருந்திக் கதறி அலறும் நிலையிலுள்ளோம்! இனைய செய்திகள் பலவும் கருதியே, ஆசிரியர் இளங்கோவடி கள் போன்ற தமிழ்ப்பெருஞ் சான்றோர்கள் பலரும் “ தெய் வம் தெளிமின் ! தெளிந்தோர்ப் பேணுமின் !” என நம்ம னோர்க்கு அறிவுறுத்திச் சென்றுள்ளனர்.

இங்ஙனமே, இந்நாளில் உலகப்புகழ் பெற்றுவிளங்கும் மேலைநாட்டு அறிஞர்கள் பலரும் கூறிவருவது நாம் அனை வரும் அறிந்தின்புறற்பாலதாகும்.* “ கடந்த முப்பது ஆண்டு

*“ During the past thirty years, people from all the civilised countries of the earth have consulted me... Among all my patients in the

களாக உலக நாகரிக நாடுகள் அனைத்திலுமுள்ள மக்கள் பலரும் என்பாற் கலந்து ஆய்வுரை கேட்டுள்ளனர். என்னுடைய பிணியாளர்கள் அனைவருள்ளும், வாழ்க்கையின் இரண்டாம் பகுதியில்—அதாவது, முப்பத்தைந்து வயதுக்கு மேல்—தமது இன்னல்கள் தீருதற்கு உரிய கடைசி வழியாகத் தமது வாழ்க்கையிற் சமயவுணர்வு கைவரப் பெறுதலைக் கொள்ளாதவர்கள், ஒருவராவது இல்லை. அவர்களில் ஒவ்வொருவரும் நோயுற்றதற்குக் காரணம், உயிர்ப்புடைய ஒவ்வொரு சமயமும் அவ்வக்காலத்தில் தன்னைப் பின்பற்றும் மக்களுக்குத் தருகின்ற மனநிறைவுணர்ச்சியை, அவர்கள் பெறுமல் இழந்துவிட்டமையேயாகும். அவர்களில் ஒருவராவது மீண்டும் சமயவுணர்வு கைவரப்பெறுமல், உண்மையில் பிணி தீரப்பெற்றிலர்....'' என உலகப் புகழ்பெற்ற மனவியல் அறிஞர் ஆகிய பேராசிரியர் ஜங் என்பார் கூறுவது ஈண்டு உணரத்தக்கது. ஆசிரியர் திருவள்ளுவர் பெருமான் "தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் - மனக்கவலை மாற்றல் அரிது'' என இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அருளிச்செய்தது பொய்யாமொழியேயன்றோ?

இவ்வாறே, உலகப் புகழ்பெற்ற மற்றொரு பேறிஞர் ஆகிய பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கூறுவதும் ஈண்டுக் கருதியுணரற் பாலது. "நம் காலநிலைக்கு வேண்டுவன சில இருக்கின்றன; விலக்கப்பட வேண்டுவன சில உள்ளன. நம் காலநிலையில் அருளுணர்வும், 'மனித இனம் இன்பமாக வாழ வேண்டும்' என்னும் விருப்பமும் தேவைப்படுகின்றன.

---

second half of life—that is to say, over thirty-five years—there has not been one, whose problem in the last resort was not that of finding a religious outlook on life. It is safe to say that every one of them fell ill, because he had lost that which the living religions of every age, have given to their followers, and none of them has been really healed who did not regain his religious outlook ''

—*Professor Jung*.

எல்லாவற்றினும் மேலாக, திடமான நம்பிக்கையும், புதியன படைத்தலில் துடிப்பும் இக்காலத்திற்கு இன்றியமையாதன வாகும். நான் கூறப்புகும் செய்தியின் அடிப்படை அல்லது வேர் யாதெனின், மிக எளிமையானதும் மிகப் பழமைமுறை யில் அமைந்ததுமான ஒன்றேயாம். நான் கூற முற்படுவது மிகமிக எளிமையும் பழைமை-முறையும் வாய்ந்ததாகல்பற்றி, ஒரு சிலர் என்பால் புன்முறுவல் பூத்து ஏளனம்செய்யக் கூடுமே என்றஞ்சி, அதனைக் குறிப்பிடுவதற்குக்கூட நான் பெரிதும் நாணம் கொள்ளுகின்றேன். நான்கருதும் பொருள்-அதனைக் குறிப்பிடுவதற்காக, அருள்கூர்ந்து என்னை மன் னித்து விடுங்கள்—அன்பு, 'கிறித்தவ அன்பு' அல்லது சமய வுணர்வோடு கூடிய இரக்கவுள்ளம் ஆகும். இவ்வுணர்வை நீங்கள் பெறுவீர்களாயின், உங்கள் வாழ்க்கைக்கு ஓர் உயரிய நோக்கமும், செயல்களுக்கு ஒரு வழிகாட்டியும், மனவுறுதிக்கு ஒரு காரணமும், அறிவின் நேர்மைக்கு ஓர் இன்றியமையாத தேவையும் பெற்றவர்கள் ஆவீர்கள்''* என்பது, உலகப் புகழ் பெற்ற தத்துவ-கணிதப் பேராசிரியர் ஆகிய பேர்ட்ரண்ட் ரஸ்ஸல் அவர்களின் கூற்று. இவற் றினுலெல்லாம், மனிதகுல வாழ்க்கைக்குச் சமயவுணர்வு எத்துணை இன்றியமையாதது என்பது பெறப்படும்.

---

*"There are certain things that our age needs, and certain things it should avoid. It needs compassion, and a wish that mankind should be happy : it needs, above all, courageous hope and the impulse to creativeness... The root of the matter is a very simple and old-fashioned thing, so simple that I am almost ashamed to mention it, for fear of the derisive smile with which wise cynics will greet my words. The thing I mean—please forgive me for mentioning it—is love, Christian love, or compassion. If you feel this, you have a motive for existence, a guide in action, a reason for courage, an imperative necessity for intellectual honesty." —*Bertrand Russell.*

# தேவாரத் தொரு பாடல் உரை

(சித்தாந்தப் பிரசங்காமிர்தம், பூ. சமரபுரி முதலியார், தாம்பரம்)

திருஞான சம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பாடல்களுள் பல, ஞானப் பொருள்கள் நிறைந்தவைகள். முக்கியமாக ஆண்டவனை அடைய வேண்டுமானல் மெய்ஞ் ஞானிகள் என்ன செய்ய வேண்டுமென்று நினைப்பூட்டு கின்றார். அந்தப் பாடல்களுள் "வீடலால வாயிலாய்" என்பது ஒன்று. அதன் உரை பின்வருமாறு :—

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே!
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

(திருஆலவாய் – திருஞானசம்பந்தர்.)

கொண்டு கூட்டு :—விழுமியார்கள், வீடு அவாய் அ(ல்)லால் இலாய், நின்கழல் பாடலால் பரவ, அவாய் (அவ்விழுமியார் மனத்தை) இல் ஆய் நின்ற பண்பனே! காடு அ(ல்)லால் அவாய் இலாய்! நீள் கடி கபாலி மதில் கூடல் ஆலவாய் இல் ஆய் குலாயது என்ன கொள்கை?

பதவுரை :—விழுமியார்கள் = (வீடு அடையும் பக்குவ முடைய) அறிவின் மேலவர்கள்

வீடு = முத்தியை

அவாய் = விரும்பி

அலால் = முத்தியல்லாத மற்றதில்

இலாய் = விருப்பம் இல்லையாய் (என்பது வீட்டின்பம் ஒன்றையே விரும்பி)

நின் கழல் = தேவரீருடைய திருவடிகளை

பாடலால் பரவ = தோத்திரப்பாடல்களால் துதிக்க

அவாய்=(தேவரீர் அப்பாடலுக்கு) ஆசைப்பட்டு

இல் ஆய்=(அப் பெரியார்களுடைய மனத்தையே) இடமாகக் கொண்டு

நின்ற=(நீங்காது நிலைத்து அத்துவிதமாகக் கலந்து) நிற்கும்

பண்பனே=அருட்பண்பு உடையவரே! ('ஒட்டி வாழ்தி' என்னும் அப்பர் திருவாக்கும் இப்பொருட்டு)

காடு அலால்=(எல்லா உயிர்களும் ஒடுங்கும்) சர்வ சம்மார இடத்தை அல்லாது (வேறு இடத்தை)

அவாய் இலாய்=விரும்பித் தங்காதவரே! (இப்போது)

நீள் கடி=நீண்ட காவலாகவுள்ள அல்லது விளக்கம் அமைந்த (கடி=காவல், விளக்கம்)

கபாலி மதில்=கபாலி மதிலை உடைய

கூடல் ஆலவாய்=நான்மாடக் கூடல் என்னும் திருவாலவாயை

இல் ஆய்=இருப்பிடமாகக் கொண்டு

குலாயது=விரும்பி எழுந்தருளி இருப்பது

என்ன கொள்கை=என்ன காரணம் என்பதை அடியேங்களுக்கு விளங்க உரைப்பீராக.

இனி, வீடல் அவாய்=முக்தி அடைதலை விரும்பி, நின் கழல்=தேவரீருடைய திருவடிகளை, இலாய்=அதற்குரிய இடமாய், அவாய்=விரும்பி, பாடலால் பாவ=தோத்திரப் பாடல்களால் துதிக்க—என்றும் பொருள் உரைக்கலாம். அப்போது, வீடலால் என்பதிலுள்ள ஆல் அசை.

இரண்டாம் அடியில், இலாய்ப்பரவ என்பதில் பகரமும், நான்காம் அடியில் இலாய்க் குலாயது என்பதில் ககரமும் தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரம்.

———

உ

## சைவ சித்தாந்த மகா சமாஜம்

# 54-வது ஆண்டு அறிக்கை

(ஆண்டு 1959)

திருவருள் துணைகொண்டு சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 1959-ஆம் ஆண்டு அறிக்கை சமாஜப் பேரவையின் முன் சமர்ப்பிக்கப்படுகிறது.

### சமாஜப் பணியாளர்கள்

**தலைவர் :** திரு. இராவ்சாயிப். நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள்.

**துணைத்தலைவர்கள் :** (1) திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல், டி. அவர்கள்; (2) சித்தாந்த சிகாமணி - திரு. க, வச்சிரவேல் முதலியார், பி. ஏ., எல். டி. அவர்கள்.

**செயலர் :** (1) திரு. கி. இராமலிங்க முதலியார், எம். ஏ., அவர்கள்.

**உதவிச் செயலர் :** (2) திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி. ஏ. அவர்கள்.

**பொருட்காப்பாளர் :** திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார், எம்.ஏ. அவர்கள்.

சைவ சித்தாந்த மகா சமாஜம் முதன் முதலில் திருப்பாதிரிப்புலியூரில் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் மடாலயத்தில் விசுவாவசு ஆண்டு ஆனிமீ (7–7–1905) வெள்ளிக்கிழமை தொடங்கப் பெற்று, இன்றுவரை இறைவன் திருவருளால் மேன்மைகொள் சைவநீதி உலகெலாம் விளங்க வேண்டுமென்ற பெருநோக்குடன் சமயத் தொண்டாற்றி வருகின்றது. சபைகளின் பதிவுச்சட்டபடி 11–12–1915ல் S. No. 6 of 1915–16 என்ற எண்ணில் இச்சமாஜம் பதிவு செய்யப்பட்டுள்ளது.

சென்ற ஆண்டு மயிலம் எனும் முருகன் திருப்பதியில் இச்சமாஜத்தின் 53-வது ஆண்டுவிழாவை ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் மூன்று நாட்கள் 26–12–58 முதல் 28–12–1958 வரை சிறப்பாக நடத்தித் தந்தனர். அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியாரவர்களின் அன்புகெழுமிய முயற்சியால் இவ்வாண்டின் சமாஜ மாநாடு வாலாஜாபாத்தில் நடைபெறுகிறது.

## சமாஜத்தின் நோக்கங்கள்

உய்யும் வகை யாதென வேட்கை கொண்டு வினவும் மக்கள் உலகெங்குமே பரவி நிற்கின்றனர். சைவ சமயத்தில் அவ்வேட்கையைத் தணிக்கவல்ல தக்க விடையும் வழியும் பொதிந்து கிடப்பதை, உய்யும்வகை நாடும் மக்கள் எங்கெங்கு பரவி இருக்கின்றார்களோ ஆங்கெல்லாம் நன்கினிது விளங்கச் செய்யவேண்டுமென்பதே சமாஜத்தின் முக்கிய நோக்கமாகும். அதற்குதவியாகச் சமய நூல்களை அடக்க விலைக்குப் பதிப்பித்து வழங்கல், "சித்தாந்தம்" என்னும் உயரிய பத்திரிகையை மாதந்தோறும் அரிய கட்டுரைகளுடன் வெளியிடல், சமயச் சொற்பொழிவுகளை மாதந்தோறும் ஆங்காங்கு நிகழ்த்தல், சைவ சமய பரமாசாரியர்கள் நாயன்மார்கள் சந்தான குரவர்கள் ஆகியவர்களுடைய திருநட்சத்திரங்களைக் கொண்டாடுதல், சிவாலயங்களில் வார வழிபாடு நடத்துதல், "சைவப் புலவர் தேர்வு" "இளஞ் சைவப் புலவர் தேர்வு" ஆங்காங்கு நடாத்தி மாணவர்கள் சைவ சமய நூல்களைக் கற்க ஊக்குவித்தல், துண்டுப் பிரசுரங்கள் மூலம் சமய போதனைகள் - நாயன்மார்கள் சரித்திரங்கள் வெளியிடுதல், தக்கவர்கள் ஆதரவுகொண்டு தேவார வகுப்புகளைக் கூடிய இடங்களில் ஏற்படுத்தி மாணவர்களுக்குப் பன்னிரு திருமுறைகளைக் கற்பித்துப் பண்ணிசையுடன் தேவாரப் பாடல்களைப் பாடக் கற்பித்தல் முதலியன செய்து வருகின்றது.

இவ்வாண்டு நிகழ்த்தப்பட்ட இத்தகைய பணிகளின் விவரங்களை ஈண்டு நோக்குவோம் :

## வெளியீடுகள்

மார்கழி மாதம் 'திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி படிப்பவர்களுக்குப் பயன்படவும், போட்டிகள் வைத்து மாணவர்களுக்குப் பரிசு வழங்க உதவி புரியவும் திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கட்கு மயிலை கிழார் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி.ஏ.,பி.எல். அவர்கள் எழுதிய எளிய உரையுடன் 6 புதுக்காசு விலையில் 3000 பிரதிகள் அச்சிடப்பட்டுள்ளன.

திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி. ஏ. அவர்களின் யந்திர விரிவுரையுடன் கூடிய கந்தரனுபூதி நூல் 120 பக்கங்களில் சமாஜ வெளியீடாக வெளிவருகிறது.

ஒவ்வோர் ஆண்டும் வெளியிடும் புத்தகங்களை மக்கள் பெரிதும் வாங்கிப் பயன்படுத்தாக் குறைபாட்டினுல், சமாஜ மூலதனம் சுமார் ரூ. 4000 முடங்கிக்கிடக்கின்றது. அங்கத்தினர்களும் பொதுமக்களும் அந்நூல்களை விரைவில் விலைப்படுத்த உதவி புரியவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது.

## " சித்தாந்தம் "

இச் சிறந்த மாத சஞ்சிகை சமாஜ அங்கத்தினர்களுக்கு இலவசமாக வழங்கப்படுகிறது. போதிய அங்கத்தினர்களுடைய தொகைப் பெருக்கம் இல்லாக் குறையால், இப்பத்திரிகையின் அளவு குன்றிச் சிலகட்டுரைகளே வெளியிடப்படுகின்றன. தற்போதுள்ள அங்கத்தினர் தொகை 523. சென்ற ஆண்டிருந்த தொகையைவிட 25 அதிகப்பட்டிருந்தும் இவ்வளர்ச்சி போதாது என்பது சொல்லாமலே விளங்கும். ஒவ்வொரு அங்கத்தினர்களும் இதை மனத்தில்கொண்டு குறைந்தது ஒவ்வொரு புதிய அங்கத்தினரைச் சேர்த்துவைப்பீர்களானுல் சமாஜ அங்கத்தினர் தொகை இரட்டிக்கச் சமாஜப் பொருளாதாரநிலை வன்மையுறும். இச் சஞ்சிகையையும் அதிகப் பக்கங்களுடனும் அரிய இனிய பல கட்டுரைகளுடனும் வெளியிட முடியும்.

### கூட்டங்கள்

இவ்வாண்டு நடந்த செயற்குழுவின் கூட்டம் 8(எட்டு). பொதுக் கூட்டங்கள் 2. 21-12-1958ல் ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் நடந்த பொதுக் கூட்டத்தில் 53-வது ஆண்டு அறிக்கையும், வரவு செலவுக் கணக்கும் ஒப்புதல் அளிக்கப்பட்டன. 28-12-1958ல் மயிலத்தில் நடந்த ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் இவ்வாண்டின் சமாஜப் பணியாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சிறப்புக் கூட்டங்கள்

(1) 16-2-59 திங்கட்கிழமை மயிலைக் கபாலீச்சரத்தில் அமைச்சர் திரு. எம். பக்தவத்சல முதலியார் அவர்கள் தலைமையில், சமாஜத்தின் சார்பில் தவத்திரு ஞானியார் அடிகள் நினைவு நாள் கொண்டாடப்பட்டது.

(2) 5-4-59 ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் திரு. அ. உத்தண்டராம பிள்ளை அவர்கள் தலைமையில் திரு. ம. பா. நினைவு நாள் விழா கொண்டாடப்பட்டது. அன்று திரு. மணலி-எஸ். இராமகிருஷ்ண முதலியார் பி.ஏ., அவர்கள் சமாஜக் கட்டிட நிதிக்காக ரூ. 6000 நன்கொடை அளிப்பதாகத் தெரிவித்தார்கள். அத்தொகை போதாத காரணத்தால் அதை வாங்கிப் பயன்படுத்த முடியாத நிலையில் சமாஜ மிருக்கிறது. இன்னும் போதிய தொகை இருந்தால் மனையுடன் கட்டிடம் அமைக்கமுடியும். எனவே அன்பர்கள் நன்கொடையளிக்கமுன்வரின் சமாஜத்திற்கென ஒருகட்டிடம் அமைக்கலாம்.

(3) 2-5-59 திருநாவுக்கரசர் திருநாள் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்ரமணிய பக்தஜன சபையில் திரு. அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட். அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. திருமதி வித்வான் மீனாட்சிசுந்தர சிவை அவர்கள் அப்பரருள்மொழியைப் பற்றிப் பேசினார்கள்.

(4) 24-5-59 கபாலீச்சரத்தில் திரு. சி. என். சிங்காரவேல் முதலியார், எம்.ஏ. அவர்கள் தலைமையில், திருஞானசம்பந்தர்

திருநாள் கொண்டாடப்பட்டது. திரு. ஆறுமுக முதலியாரவர்கள் சொற்பொழி வாற்றினர்கள்.

(5) 14-6-59 இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் சேக்கிழார் திருநாள் கொண்டாடப்பட்டது. திரு. ஜி. கல்யாணம் பிள்ளை, எம்.ஏ., திரு. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். முதலியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

(6) 19-7-59 மாலை திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள் தலைமையில் மாணிக்கவாசகர் விழா கொண்டாடப்பட்டது. வித்வான் பிச்சைபிள்ளை (கலைக் கல்லூரிப் பேராசிரியர்) சொற்பொழிவாற்றினர்கள்.

(7) 10-8-59 மாலை திருமயிலைக் கபாலீச்சரத்தில் சுந்தரர் திருநாள் ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தைச்சார்ந்த திரு. சுவாமி பரமானந்தர் அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. திரு. ஜி. கல்யாணம், எம்.ஏ. அவர்களும், வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார், பி.ஓ.எல். அவர்களும் சொற்பொழிவாற்றினர்கள்.

(8) 1-11-59 ஞாயிறன்று மாலை தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தில் ஸ்ரீ மெய்கண்டதேவர் நினைவுத் திருநாள் சித்தாந்த சிகாமணி - திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி. அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. சிவஞானபோதப் படனமும் செய்யப்பட்டது. தினமும் சைவ சமய அன்பர்கள் இந்நூலைப் பாராயணம் செய்வதற்கு 12 புதுக்காசு விலையில் சிறிய புத்தகமாகச் சமாஜம் வெளியிட்டுள்ளது. அதை வாங்கி அன்பர்கள் பயன்படுத்தவேண்டும்.

(9) 11-11-59-ல் திருப்போரூரில் முருகன் செந்தமிழ்க் கழக முதலாண்டு விழாவைத் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., துணை ஆணையாளர் அறநிலையப் பாதுகாவல்துறை, அவர்களின் தலைமையில் சமாஜ அங்கத்தினர்கள் சென்று நடத்திவைத்தனர். திரு. ஜி. கல்யாணம்

பிள்ளை, எம்.ஏ., திரு. ஜி. வடிவேலாயுதம், எம்.ஏ., திரு. ரே. த. கிருஷ்ணசாமி முதலியார், பி.ஏ., பி.டி., திரு. புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். முதலியவர்கள் சொற்பொழி வாற்றினார்கள். திரு. வித்வான் அம்பைசங்கரனார் நன்றியுரை வழங்கினார்கள்.

(10) தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தார் நடத்தி வரும் மாத வழிபாட்டுக் கூட்டங்களிலும் சமாஜம் பங்கெடுத்து வருகிறது. அச்சிறுபாக்கம், திருப்பாசூர், திருவலிதாயம், திருஒற்றியூர், திருவான்மியூர் முதலிய தலங்களில் இக் கூட்டங்கள் நடைபெற்றுள்ளன.

## மாநாடுகளும் ஆண்டு விழாவும்

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் 53-ம் ஆண்டு நிறைவு விழாவையொட்டிச் சைவர் மாநாடு, சைவ மங்கையர் மாநாடு, சைவ இளைஞர் மாநாடுகள், மயிலத்தில் 1958-ம் ஆண்டு டிசம்பர் மாதம் முறையே 27, 28, 29 தேதிகளில் நடைபெற்றன. அவற்றைச் சிறப்புற நடத்தித்தந்த ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய தேசிக சுவாமிகள் அவர்களுக்குச் சமாஜம் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறது.

அவ்விழாவைத் துவக்கிவைத்த உயர்மன்ற நீதிபதி - திரு. வி. சுப்பிரமணிய நாடார் அவர்களுக்கும், சைவர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய சித்தாந்த சிகாமணி - திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்களுக்கும், சைவ மங்கையர் மாநாட்டிற்குத் தலைமை வகித்த திரு. ந. மங்கையர்க்கரசி அம்மையார் அவர்களுக்கும், இளைஞர் மாநாட்டுத் தலைவர் திரு. அடிகளாசிரியர் அவர்களுக்கும் சொற்பொழிவு ஆற்றிய அன்பர்கட்கும் சமாஜம் நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

## சமய அறிவு வளர்ச்சித் தேர்வுகள்

இவ்வாண்டு 22-11-1959-ல் சைவப் புலவர் தேர்வும் இளஞ் சைவப் புலவர் தேர்வும், சென்னையில் சமாஜ அலுவலகத்திலும், இலங்கையில் விவேகானந்த சபையிலும், யாழ்ப்பாணத்தில் நாவலர் பாடசாலை வண்ணார் பண்ணையிலும்,

கோவையில் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியிலும், தஞ்சைக் கருந்திட்டைக்குடியில் குமாரசாமி உயர்நிலைத் தொடக்கப் பள்ளியிலும், நாகர்கோயில் தேசிக விநாயகர் தேவஸ்தான உயர்நிலைப்பள்ளியிலும் நடத்தப்பட்டன.

தேர்வில் வெற்றிபெற்ற சைவப் புலவர்கள் : அ. சண்முகசுந்தரம் பிள்ளை, ஆ. இராமசாமி, மு. ந. மாசிலாமணி, மா. வீரபத்திரன், எஸ். ஆர். தேமொழி, ஏ. அழகப்ப பிள்ளை, அ. சிவசுப்ரமணிய பிள்ளை, வ. சித்திவிநாயகம்.

வெற்றிபெற்ற இளஞ் சைவப் புலவர்கள் : செல்வி எஸ். மங்கையர்க்கரசி, கே. செல்லப்ப கவுண்டன் (சிவநேசன்).

ஏனைய ஆண்டுகளைவிட இவ்வாண்டில் தேர்ச்சிபெற்றவர்களின் தொகை அதிகமிருப்பது சைவ நூல்களில் இளைஞர்களுக்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறது.

இத்தேர்வுகளை வெளி நாடுகளில் நடத்தித்தந்த திரு. மயில்வாகனன், இலங்கை; திரு. வித்துவான்-நடேசகவுண்டர், கோவை ; திரு. வள்ளிநாயகம் பிள்ளை, நாகர்கோயில்; கருந்திட்டைக்குடி திரு. குமாரசாமி உயர்நிலைத் தொடக்கப் பள்ளித்தலைமை ஆசிரியர்; திரு. கே. முனுசாமி முதலியவர்களுக்குச் சமாஜம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

வரும் ஆண்டுகளில் இன்னும் பல மாவட்டங்களில் ஆசிரியர்கள் இதில் பங்கெடுத்துக்கொண்டு மாணவர்களைச் சமயப் பயிற்சியில் ஊக்குவிக்கவேண்டும் என்று சமாஜம் கேட்டுக்கொள்கிறது.

## தேவார இசை வகுப்புக்கள்

இவ்வாண்டு சமாஜச் செயற்குழு உறுப்பினராக உள்ள திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. (ருக்மணி குக்கர் கம்பெனி, உரிமையாளர்) அவர்கள் முயற்சியால் தேவாரவகுப்புகள் பின்வரும் இடங்களில் நடத்தப்படுகிறது: (1) பனைமரத்தொட்டி சுப்பிரமணிய சுவாமிகோயில், இராய

புரம்; (2) இராயப்பேட்டை-சுந்தரேசுரர் கோயில்; (3) தேவி பாடசாலை, பழைய மாம்பலம்; (4) விசாகத்தோட்டம்-இரவுப் பாடசாலை, சைதாப்பேட்டை; (5) ஏ. வி. எச். பாடசாலை, பல்லாவரம்; (6) வேளாளத் தேனும்பேட்டை - பிள்ளையார் கோயில்; (7) தாம்பரம்-சுந்தரேசுரர் கோயில்; (8) குன்றத் தூர்-தேவார பாடசாலை; (9) இந்துமத பாடசாலை, வாலாஜா பாத்; (10) ஏகனும்பேட்டை-ஆரம்பப்பாடசாலை; (11) சுந்தர விநாயகர் தேவார பாடசாலை, அம்பாசமுத்திரம். இன்னும் பல இடங்களில் தேவாரங்களைப் பண்ணிசையுடன் பாடங் கற்பிக்க அவர்கள் தக்க உதவி புரிவார்கள். அன்னாருக்குச் சமாஜம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

## பொருள் நிலை

54-வது ஆண்டு (1-12-1958 முதல் 30-11-59 வரை) வரவு செலவுக் கணக்கிலிருந்து எடுக்கப்பட்ட தொகுப்பேடு இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆண்டின் இறுதியில் இந்தியன் பாங்கில் இருப்பு ரூ. 662-18. பொருளாளர் கை யிருப்பு ரூ. 56-43. கைவசமுள்ள புத்தகங்களின் விலை பெறுமானம் ரூ. 4326-03. பொருள் நிலை மிகவும் வருந் தத் தக்கதா யிருப்பதைச் சைவ அன்பர்கள் கவனித்துக் குறைவற ஆதரவு தரவேண்டுமென்று பெரிதும் மன்றாடி வேண்டுகிறோம்.

## விண்ணப்பம்

மேலே காட்டியுள்ள பொருள் நிலையையும் சமாஜம் செய்துவரும் பணியையும் நோக்குமிடத்துச் சமாஜ உறுப் பினர்களுக்குத் தாங்கள் செய்யவேண்டிய முயற்சிகள் என்ன வென்பது சொல்லாமலே விளங்கும். அவைகளுள் முக்கிய மானவை (1) அங்கத்தினர்களுடைய எண்ணிக்கையை ஆயி ரத்துக்கு மேற்படச் செய்ய வேண்டுமென்பது. மாவட்டப் பிரதிநிதிகளும் சைவப் பெருமக்களும் இந்தப் பணியில் ஈடு பட்டு ஆவன செய்யுமாறு வேண்டப்படுகிறது. சைவ சித் தாந்த மகா சமாஜம் தொடங்கி இற்றைக்கு 54 ஆண்டுகளாகி

யும் தனக்கென ஒரு கட்டிடமின்றி யிருத்தல் மிக வருந்தத் தக்க நிலையாகும். இக்குறைபாடு நீங்க வேண்டுமென்று ஒவ்வொரு மாநாட்டிலும் உறுப்பினர்கள் பேசியிருக்கின் றனர். இவ்வாண்டு இளைஞர் மகாநாட்டைத் துவக்கிவைக் கும் திரு. மணலி-இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ. அவர் கள் கட்டிட நிதிக்கு ரூ. 6000 தருவதாகத் தெரிவித்துள் ளார்கள். அவரைப்போன்று இன்னும் சில பெருமக்கள் உதவிபுரிய முன்வருவார்களேயானால் கட்டிடமில்லாக் குறை பாடு எளிதில் நீங்கிவிடும்.

## நன்றி

'சித்தாந்தம்' பத்திரிகைக்குக் கட்டுரை எழுதியனுப்பிய அன்பர்களுக்கும், விளம்பரம் தந்த தென்னிந்தியத் திருநெல் வேலிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தார்க்கும் சமாஜம் நன்றி பாராட்டுகிறது. சமாஜக் கூட்டங்களை அடிக்கடி நடத்த இடந்தந்துதவும் இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்த ஜன சபையினர்க்குச் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட் டுள்ளது. புதிய உறுப்பினர்களை இவ்வாண்டு சேர்த்துதவிய சைவப் பெருமக்களுக்கும், "சித்தாந்தம்" இதழைக் காலந் தாழ்க்காது அச்சிட்டுத் தரும் சாது அச்சகத்தினர்க்கும், இவ்வாண்டு விழாக்களில் சொற்பொழிவாற்றிய அறிஞர் களுக்கும், சைவப் பணியை ஏற்று நடத்திவரும் தொண்டர் களுக்கும், சைவர்கள் யாவருக்கும் எமது நன்றி உரித்தாகுக.

செயற்குழுவினர் அனுமதிப்படி,

இப்படிக்கு,

சென்னை
15-12-59.

கீ. இராமலிங்கம்
மா. ப. தியாகராஜன்
செயலர்கள்.

## சைவ சித்தாந்த மகா சமாஜ 54-ம் ஆண்டு வரவு செலவுக் கணக்கு

**[1-12-58 முதல் 30-11-59 வரை]**

| வரவு | ரூ. | ந.பை | செலவு | ரூ. | ந.பை |
|---|---|---|---|---|---|
| ஆரம்பக் கையிருப்பு | 20 | 32 | 'சித்தாந்தம்' அச்சுக்கூலி முதலியன | 1689 | 26 |
| ஆரம்ப இந்தியன் பாங்க் இருப்பு | 1339 | 23 | காகிதம் முதலியன வாங்கியது | 926 | 48 |
| சந்தா வரவு | 1144 | 00 | தபால் கூலி | 431 | 40 |
| தேர்வுக் கட்டணம் | 76 | 00 | போக்கு வரவுச் செலவு | 18 | 50 |
| புத்தக விற்பனை | 1057 | 86 | விளம்பரச் செலவு | 8 | 75 |
| வி. பி. தபால் செலவு வரவு | 112 | 36 | விழாச் செலவுகள் | 35 | 00 |
| பாங்கி வட்டி | 28 | 23 | கையிருப்பு | 56 | 43 |
| விளம்பர வருமானம் | 50 | 00 | ஆண்டு முடிவு இந்தியன் பாங்க் இருப்பு | 662 | 18 |
| | 3828 | 00 | | 3828 | 00 |

சமாஜப் பொருள் வலிவு :

முன்னாட் பொருளாளர் திரு. T. K. சுந்தரம் பிள்ளை அவர்களிடமிருந்து வரவேண்டியது ரூ. 414 75

கையிருப்புப் புத்தகங்களின் (விற்பனை விலை) மதிப்பு ரூ. 4955 18

புத்தக விற்பனைமூலம் பாக்கி வரவேண்டியது ரூ. 169 75

கி. இராமலிங்கம்,

S. திருநாவுக்கரசு, ஆண்டுப் பரிசோதகர்.

M. சிவராமன், மாதப் பரிசோதகர்,

C. N. சிங்காரவேலு முதலியார், பொருளாளர்,

M. P. தியாகராஜன், செயலர்கள்,

# பிற்காலச் சைவம்*

(பேராசிரியர்-திரு. பூ. ஆலாலசுந்தரனார், M.A.)

தென்பாண்டி நாட்டை வீரமாறன் என்ற பாண்டியன் கி. பி. 1473-முதல் கி. பி. 1506-வரை ஆண்டு வந்தான். அவன் காலத்தில் வாழ்ந்த புராணத்திருமலைநாதர் என்பவர் 813 திருவிருத்தங்களைக் கொண்ட சிதம்பர புராணத்தையும் 516 கண்ணிகளைக் கொண்ட மதுரைச் சோக்கநாதர் உலா என்னும் நூலினையும் இயற்றினர். சொக்கநாதர் உலா மகாமகோபாத்தியாய டாக்டர். உ.வே. சாமிநாத ஐயர் அவர்களால் சிறந்த முறையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. விஜய நகரத்து அரசரான கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1509-கி. பி. 1530) காலத்தில் சீர்காழியில் வசித்த தத்துவப் பிரகாசர் என்பவர் 337 திருவிருத்தங்களைக் கொண்ட தத்துவப் பிரகாசம் என்ற ஒரு சித்தாந்த நூலினை அருளிச்செய்தார். இந்நூலில் இவர் சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பாதங்களையும் விளக்கிக் கூறியுள்ளார். சிவஞான சித்தியார் பரபக்கத்திற்கு உரை எழுதியவர் ஒரு தத்துவப் பிரகாசர். அவர் இங்குக் குறிக்கப்பட்ட தத்துவப் பிரகாசரின் வேறுவர். அவர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரின் மாணவராவர். மறைஞான சம்பந்தர் என்ற பெயருடைய பல புலவர்கள் வாழ்ந்ததாகத் தெரிகின்றது. அவருள் ஒருவர் உமாபதி சிவாசாரியாரின் ஆசிரியரான மறைஞானசம்பந்தர். இவரது ஊர் கடவூர் என்றும், திருப்பெண்ணாகடம் என்றும் கூறுவர். இவரது காலம் உமாபதி சிவாசாரியாரின் காலமாகிய கி. பி. பதினான்காம் நூற்றாண்டாகும். மறைஞானசம்பந்தர் என்ற ஒருவர் சிதம்பரத்தில் குகை மடத்தில் வசித்து வந்தார். மறைஞானசம்பந்தர், மறைஞானசம்பந்த தேசிகர் மறைஞானசம்பந்த நாயனார் என்ற இப்பெயர்கள் இவரைக் குறிப்பதாகும். இவர் 1. தொல்காப்பியம் சிவமயம். 2. கமலாலய புராணம். 3. சிவதருமோத்தரம் 4. பதி பசு பாசப்பனுவல் 5. சங்கற்ப நிகாரணம் 6. பரமோபதேசம்

*சமாஜ ஆண்டு விழாச் சொற்பொழிவுக் கட்டுரையின் பிற்பகுதி:

7. முத்தி நிலை 8. சைவ சமய நெறி 9. அருணகிரிப் புராணம் என்ற நூல்களைச் செய்துள்ளார். "இவர் செய்த நூல் களுள்ளே தொல்காப்பியம் சிவமயம் என்பன இரு நூல்களா ஒரு நூலா என்பது விளங்கவில்லை. இருவேறு நூல்களென் பது பெரியோர் கொள்கை"* எனத் திரு. S. சோமசுந்தர தேசிகர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். மறைஞானசம் பந்த தேசிகர் கமலாலய புராணம் கி. பி. 1545-ம் ஆண்டில் இயற்றியதால் இவர் பதினாறும் நூற்றாண்டின் இடைப்பகுதி யில் வாழ்ந்தவராவர். சிவஞான சித்தியாருக்கு உரை இயற் றிய மறைஞான தேசிகர் என்பவர் இவரது மாணவராவர்.

சிவாக்கிர யோகிகள் என்பவர் சூரியனார் கோயில் ஆதீன மடத்தைச் சார்ந்தவராவர். இவர் சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் இரண்டினுக்கும் உரை செய்துள்ளார். இவர் இயற்றிய நூல்கள் 1. சைவ சந்நியாச பத்ததி :— இது தஞ்சையையும் சோழ நாட்டினையும் ஆண்ட செவ்வப்ப நாய்க்கனுடைய வேண்டுகோளின்படி இயற்றப்பட்டது. ஸ்மார்த்தர்களைப்போல் சைவர்களும் சந்நியாசம் பெற உரிமையுடையவர் என்பதும் சைவ சந்நியாசிகளின் கடமை இன்னதென்பதும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இது வடமொழியில் இயற்றப்பட்ட நூலாகும். 2. கிரியா தீபிகை :—இது வடமொழியில் இயற்றப்பட்ட நூல்; ஒழுக் கங்களைப் பற்றிக் கூறுகின்றது. 3. சைவ பரிபாஷை :— இது சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கும் ஒரு உரை நடை நூல். 4. வடமொழிச் சிவஞானபோத சங்கிரக வியாக்கியானம் :—இது வடமொழியில் இயற்றப்பட்ட சிவஞானபோத உரைநூல். 5. சிவாக்கிர பாஷ்யம் :— சிவஞான போதத்திற்கு இயற்றப்பட்ட பேருரை நூல். 6. தேவிகா லோத்திரத் தமிழுரை :—இது தேவியின் சிறப் பைக் கூறும் நூல். 7. சர்வக்ஞானோத்தரத் தமிழுரை.—இது சிவபரத்துவம் கூறும் நூல். 8. அரதத்தாசாரியார் செய்த சுருதி சூக்திமாலை தமிழுரை :—இது வேதங்களின் கருத்

---

* தமிழ்ப் புலவர்கள் வரலாறு : பதினாறும் நூற்றாண்டு—திரு. S. சோமசுந்தர தேசிகர். பக்கம் - 15.

லைக் கூறும். 9. சிவநெறிப் பிரகாசம் :—ஆசிரியர் தம் மாணவியாகிய சுவாந்த நாச்சியார் பொருட்டு இந்நூலை இயற்றினர். இது 215 திருவிருத்தங்களையுடையது. சிவநெறியைச் சுருக்கமாகக் கூறுகின்றது. இதற்குச் சிவாக்கிர யோகிகளின் மாணவரான நந்தி சிவாக்கிர யோகிகள் ஒரு உரை செய்துள்ளார். ஆசிரியர் இயற்றிய சைவ சந்நியாச பத்ததியில் அது தஞ்சையை அரசாண்ட சின்ன செவ்வாச்சுத நாய்க்கர் அவையில் சாலிவாகன சகம் 1486-ல் (கி. பி. 1564) அரங்கேற்றப்பட்டது என்ற அகச்சான்று காணப்படுவதால் ஆசிரியர் காலம் கி. பி. பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

கமலை ஞானப் பிரகாசர் :—இவர் சரியை முதலிய நான்கு பாதங்களுக்கும் நூல்கள் பல இயற்றியுள்ளார். "அனுட்டான அகவல்" "புட்பவிதி" "பூமாலை" என்பன சரியா பாதத்தன. "சிவபூசை அகவல்" கிரியா பாதத்தினையும், "பிரசாத மாலை" யோக பாதத்தினையும், "சிவானந்த போதம்" ஞான பாதத்தினையும் விளக்கப்போந்தன. இவைகளையன்றி அத்துவாக் கட்டளை, அண்ணாமலைக் கோவை, திருவாரூர்ப் புராணம், திருமழுவாடிப் புராணம் முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டன. இவரது மாணவர் பலராவர். அவருள் ஒருவர் தருமபுர ஆதீனத் தலைவரான குருஞானசம்பந்தராவர். தம் ஆசிரியர்மீது பல நூல்கள் இயற்றியுள்ளார். அவற்றுள் ஒரு பாடலை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

"தாயே கமலையுண் ஞானப்ர காசநின் றன்னிடத்து
நாயே னுளத்தன் பொருசற்று மில்லைநல் லோர்கண்முன்னே
நீயே துணையென்றும் நின்னடி யானென்ற நின்பெயரும்
பேயேன் றினஞ்சொல் பிழைபொறுத் தாள்வை பெருமையினே."

ஒற்றியூர்ப் புராணம் பாடிய ஞானப்பிரகாசர், மாசிலாமணிச் சம்பந்தர், சேது புராணம் பாடிய வேதவனம் நிரம்பவழகிய தேசிகர் முதலியோர், கமலை ஞானப்பிரகாசரின் மாணவராவர். இவர் இயற்றிய திருமழுவாடிப் புராணத்தில் காணப்பெறும் அகச்சான்றாலும் கி. பி. 1482-ல் எழுந்த

கல்வெட்டொன்றுனும் இவரது காலம் 16-ம் நூற்றுண்டின் பிற்பகுதி எனக் கூறலாம்.

குருஞான சம்பந்தர் :—திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத் தலைவராக விளங்கிய இவர் பல நூல்கள் இயற்றியுள்ளார். 1. பண்டாரக் கலித்துறை :—இது தம் ஆசிரியரான ஞானப்பிரகாசர்மேல் பாடிய ஒரு தோத்திர நூல். 2. நவரத்தின மாலை :—தம் ஆசிரியர் சிவத்துடன் கலந்தபோது பாடிய நூல். 3. சொக்கநாதக் கலித்துறை:—இது தமது வழிபடு கடவுளான சொக்கலிங்கப் பெருமான் மீது பாடப்பட்ட நூல். 4. சொக்கநாத வெண்பா :—இது தம் வழிபடு கடவுளான சொக்கநாதரை முன்னிலைப்படுத்திச் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கிய நூலாகும். 5. சிவபோகசாரம்:—இது சைவசித்தாந்தக் கருத்தை விளக்கும் நூல். 6. முத்தி நிச்சயம் :—இது மறைஞான தேசிகர் பாடிய முத்தி நிலையினை மறுத்துச் சிவபெருமான் திருவடி அடைதலே முத்தி என்பதை விளக்குவதாகும். 7. திரிபதார்த்த தசகாரிய அகவல்:—இதில் தத்துவரூபம் முதலிய தசகாரியங்கள் விளக்கப்பட்டுள்ளன.

திருவோற்றியூர் ஞானப்பிரகாசர் :—இவர் திருவொற்றியூர்ப் புராணம் பாடியுள்ளார் ; சிவஞான சித்தியார் பரபக்கத்திற்கும் சங்கற்ப நிராகரணத்திற்கும் உரை எழுதியுள்ளார்.

மாசிலாமணிச் சம்பந்தர் :—திருவுத்தரகோசமங்கைப் புராணம் இவரால் இயற்றப்பட்டது. இவர் கமலை ஞானப்பிரகாசரின் மாணவராதலின் இவருடைய காலமும் பதினாறும் நூற்றுண்டின் பிற்பகுதி எனக் கூறலாகும்.

நிரம்ப வழகிய தேசிகர் :—இவர் திருமறைக்காட்டில் சைவ வேளாளர் குலத்தில் பிறந்தவர். திருப்பரங்கிரிப் புராணம், சேது புராணம், சிவஞான சித்தியார் உரை, திருவருட்பயன் பொழிப்புரை,குருஞான சம்பந்தர்மாலை என்பன இவரால் இயற்றப்பட்டன. இவரது மாணவர் சம்பந்த முனிவர் கி.பி. 1592-ல் திருவாரூர்ப் புராணம் பாடினுர் எனத்

தெரிவதால் அவருக்கு முற்பட்ட இவரது காலம் 16-ம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கூறலாம்.

அதிவீரராம பாண்டியர் :—இவர் இயற்றிய நூல்களை இலக்கிய நூல்கள், சமய இலக்கிய நூல்கள் என இரு கூறு படுத்திக் கூறலாம். காசிகண்டம் கூர்ம புராணம், இலிங்க புராணம், திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி முதலானவை இவரால் பாடப்பட்டவை. பக்திச் சுவை நிரம்பப் பெற்றிருப்பதால் திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதிக்குக் 'குட்டித் திருவாசகம்' என்ற பெயரும் உண்டு.

சைவ எல்லப்ப நாவலர் :—இவர் தஞ்சை மாவட்டத்தில் காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகிலுள்ள இராதா நல்லூரில் பிறந்தவர் ; வேளாண் மரபினர். இவர் அருணைக் கலம்பகம், செவ்வந்திப் புராணம், திருச்செங்காட்டங்குடிப் புராணம் முதலியன இயற்றியுள்ளார். திருவருணைக் கலம்பகத்தில் இவர் பாடிய,

" சைவத்தின் மேற்சமயம் வேறில்லை
அதிற் சார்சி வமாம்
தெய்வத்தின் மேற்றெய்வம் இல்லெனும்
நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்திருத் தேவார
மும்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற்
ருள்எம் உயிர்த்துணையே "

என்ற பாட்டு இவரது சமயப்பற்றினை விளக்குவதாகும். "சைவ எல்லப்ப நாவலர் தஞ்சை ஜில்லாவில் காவிரிப்பூம் பட்டினத்துக்கு அருகிலுள்ள இராதாநல்லூரிலே பிறந்தவர் என்று சிலரும் திருவண்ணுமலையை அடுத்த தாழை நகரிற் பிறந்தவரென்று சிலரும் கூறுவர். தாழை நகரிற் பிறந்தவரும் இராதாநல்லூரிற் பிறந்தவரும் ஒரே பெயரையுடைய இருவர் எனத் தெரிகின்றது."* திரு. S. சோமசுந்தரதேசிகர் அவர்கள் பல கல்வெட்டுச் சான்றுகளைக் காட்டித் தாழை

*செந்தமிழ் XXX 255—264.

நகரில் பிறந்தவர் எல்லப்ப நாயனுர் (எல்லபூபதி) என்றும் அவர் திருவாரூர்க் கோவை, அருணையந்தாதி, சௌந்தரிய லகரி உரை முதலியன இயற்றியுள்ளார் என்றும் தாம் எழுதிய தமிழ்ப் புலவர் வரலாறு* என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். எல்ல பூபதி என்பார் செவ்வப்ப நாயக்கர் காலத்தில் வாழ்ந்தவராதலின் அவரது காலம் கி. பி. 16-ம் நூற்றுண்டின் பிற்பகுதியாகும்.

இதுகாறும் கி. பி. 14-ம் நூற்றுண்டு முதல் கி. பி. 16-ம் நூற்றுண்டு வரையிலுள்ள சைவ சமய நிலையைக் கண்டோம். யான் பேசுதற்குக் கொடுக்கப்பட்ட காலத்திற்குள் என் பேச்சை முடிக்க வேண்டியவனுய் இருப்பதால் இனிப் பேச இருப்பதைச் சுருக்கிக் கொள்கிறேன். பின்னர்ச் சமயம் நேரும்போது ஒவ்வொரு நூற்றுண்டின் சைவசமய நிலையினை விரிவாகக் கூறுவேன். இனி 17-ம் நூற்றுண்டின் சைவ சமய நிலையை ஆராய்வோம்.

பதினேழாம் நூற்றுண்டு:

சோழவள நாட்டில் திருமறைக்காட்டில் சைவ வேளாண் மரபில் பிறந்த பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் பாடியருளினுர். திருவிளையாடற் புராணமும் சேக்கிழார் பாடியருளிய பெரிய புராணமும் சைவ சமயத்திற்கு இரண்டு கண்கள் எனப் போற்றப்படும். இத்திருவிளையாடற் புராணத்தினைப் பரஞ்சோதி முனிவர் சாலிவாகன சகாப்தம் 1526 கி. பி. 1604-ல் மதுரையில் வெள்ளியம்பலவாணர் சந்நிதியில் அரங்கேற்றினர் என்பர்.

திருவாவடுதுறை தருமபுரம் திருப்பனந்தாள் முதலிய இடங்களில் விளங்கிய சைவ மடங்களின் தலைவர்கள் சிறந்த சமயப்பணி ஆற்றுவாராயினர். 14-ம் நூற்றுண்டில் விளங்கிய உமாபதி சிவாசாரியாரின் முதல் மாணவர் அருள் நமச்சிவாய தேசிகர். இவருடைய மாணவர் திருவாவடுதுறையிலிருந்த

*தமிழ்ப் புலவர்கள் வரலாறு [பதினுறும் நூற்றுண்டு] பக்கம்—191.

சித்தர் சிவப்பிரகாசர். சித்தர் சிவப்பிரகாசரின் மாணவரான நமச்சிவாய மூர்த்திகள் திருவாவடுதுறை மடத்தினை நிலை நாட்டியவராவர். இவருடைய மாணவர் மறைஞான தேசிகர். இவர் அம்பலவாண தேசிகருக்கும் தட்சிணாமூர்த்தி தேசிகருக்கும் ஞானவுரை பகர்ந்தார். தட்சிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம் உபதேசப் பஃறொடை என்ற இரண்டு ஞான நூல்களை இயற்றினார். அம்பலவாண தேசிகர் தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசயமாலை, நமச்சிவாய மாலை என்னும் பத்து நூல்களை இயற்றியருளினார். இப்பன்னிரண்டு நூல்களுடன் ஈசான தேசிகர் இயற்றிய தசகாரியமும், பின் வேலப்ப தேசிகர் இயற்றிய பஞ்சாக்கரப் பஃறொடையும் சேர்ந்து பண்டார சாத்திரம் பதினான்கு எனப் பெயர் பெற்றன. இவைகள் சைவ ஆதீனத் தலைவர்களாகிய பண்டார சந்நிதிகளால் இயற்றப்பட்டதால் பண்டார சாத்திரங்கள் எனப் பெயர் பெற்றன. அம்பலவாண தேசிகரின் காலம் கி. பி. 1605 என்பர் ஆராய்ச்சியாளர்.

17-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் திருமலை நாய்க்கர் காலத்தில் சைவ சமயத்தைப் பரப்பிய பெருமை ஆசிரியர் குமரகுருபர அடிகளைச் சார்ந்ததாகும். இவர் பாண்டிய நாட்டில் ஸ்ரீவைகுண்டத்தில் வேளாண் மரபில் தோன்றியவர். இவர் தருமபுர ஆதீனத்தின் நான்காம் தலைவரான மாசிலாமணி தேசிகரிடம் ஞானோபதேசம் பெற்று, காசியில் ஒரு சைவ மடத்தினைத் தோற்றுவித்தார். இவர் இயற்றிய நூல்கள் திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணி மாலை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக் கோவை, காசிக் கலம்பகம், சகலகலாவல்லி மாலை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை முதலியனவாம்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தொண்டை நாட்டில் துறைமங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்தவராவர். இவர் வீர சைவ மதத்தைச் சார்ந்தவர். சீகாளத்தி புராணத்தில் நக்கீரச் சருக்கம் கண்ணப்பர் சருக்கம் இவரால் பாடப்பட்டன. மற்றச் சருக்கங்கள் இவரது தம்பியர்களான கருணைப் பிரகாசர் வேலைய தேசிகர் என்பவரால் பாடப்பட்டன. இவர் செய்த நூல்கள் நன்னெறி, சோண சைல மாலை, பிரபு லிங்க லீலை, நால்வர் நான்மணி மாலை, திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், பழமலையந்தாதி, ஏசுமத நிராகரணம், திருக்கூவப் புராணம், பெரியநாயகி அம்மை விருத்தம் முதலியனவாம். வடமொழியிலுள்ள தர்க்க பரிபாஷை யென்ற நூலை இவர் மொழிபெயர்த்து உரைநடையில் எழுதியுள்ளார். இவரது காலம் கி. பி. 1752.

திருப்பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளும் வீர சைவ சமயத்தைச் சார்ந்தவர். இவர் பேரூரில் வீர சைவ மடம் ஒன்று நிறுவியுள்ளார். இவர் வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார், கொலை மறுத்தல், நெஞ்சு விடுதூது முதலிய நூல்களை இயற்றினர். இவர் சிவப்பிரகாச சுவாமிகளின் மைத்துனராதலின் இவரது காலமும் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

## பதினெட்டாம் நூற்றாண்டு :

சாந்தலிங்க சுவாமிகளின் மாணுக்கரான சிதம்பர சுவாமிகள் திருப்போரூரில் வாழ்ந்தவர். அவர் தம் ஆசிரியரின் நூல்களுக்கு உரை வகுத்ததோடு பஞ்சாக்கர விளக்கம், உபதேசக் கட்டளை, உபதேச உண்மை, திருப்போரூர்ச் சந்நிதிமுறை, திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் முதலிய நூல்களை இயற்றினர். கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் விளங்கிய தாயுமானவர் (1706 - 1744) சோழநாட்டில் திருமறைக்காட்டில் பிறந்தவர். இவர் திருச்சிராப்பள்ளியில் அரசு செலுத்திய விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கர் சமஸ்தானத்தில் கணக்கர் தொழிலில் அமர்ந்திருந்தார். நாயக்க அரசர் இறந்ததும் இவர் தம் தொழிலை விடுத்து மௌனகுரு

என்பவரிடம் உபதேசம் பெற்றுத் துறவு பூண்டு பல தலங்களுக்குச் சென்று இறைவனை வணங்கி ஞான யோகத்தில் நின்று முத்தி பெற்றார். இவர் அருளிச்செய்த பாடல்கள் பக்தியை உண்டாக்கவல்லன. அவைகளுள் வடசொற்கள் அதிகமாகப் பயின்றுள்ளன. எனினும் செய்யுள்நடை மிக எளியதாகும். இவரது பாடல்களில் பல சித்தாந்தக் கருத்துக்களைக் காணலாம்.

" பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ"*

முதலிய இவரது வாக்கு இவர் சந்தான குரவர்களிடத்தில் வைத்த அன்பினைக்காட்டுவதாகும். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சிவஞான முனிவர் வடமொழியிலும் தமிழிலும் சிறந்த புலமை பெற்றவர். இவர் இயற்றிய நூல்கள் சோமேசர் முதுமொழி வெண்பா, கலைசையந்தாதி, அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ், முல்லைவாயில் அந்தாதி, சித்தாந்த மரபு கண்டன கண்டனம், காஞ்சிப் புராணம், தொல்காப்பியச் சூத்திர விருத்தி, சிவஞான போதப் பேருரையாகிய திராவிட மாபாடியம் முதலியன. இவர் கி. பி. 1784-ல் சித்திரை மாதத்தில் ஆயில்ய நக்ஷத்திரத்தில் சிவபரிபூரணத்தை அடைந்தார். சிவஞான முனிவரின் மாணவருள் ஒருவராகிய கச்சியப்ப முனிவர் திருத்தணிகைப் புராணம், சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், திருவானைக்காப் புராணம், காஞ்சிப் புராணப் பிற்பகுதி, திருத்தணிகை ஆற்றுப்படை முதலிய நூல்களை இயற்றினர். " திருத்தணிகைப் புராணம் கற்பனை நலத்திலும் சொல்லருமையிலும் இணையற்றது."†

**பத்தொன்பதாம் நூற்றாண்டு :**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிறந்த தமிழ்த் தொண்டும் சைவ சமயத் தொண்டும் ஆற்றியவர் ஆறுமுக நாவல

---

*குருமரபின் வணக்கம் - 4 - தாயுமானவர்.

†இலக்கிய வரலாறு—கா. சுப்பிரமணிய பிள்ளை - பக்கம்-436

ராவர். (1823-1879) தமிழ் உரைநடையின் தந்தை எனக் கூறலாம். பெரிய புராண வசனம், கந்த புராண வசனம், திருவிளையாடற் புராண வசனம், சைவ வினு விடை, சிறுவர்க் கான பால பாடங்கள், சிதம்பர மான்மிய வசனம் முதலியன இவரால் எழுதப்பட்டன. சைவ சமய நெறி, திருக்கோவை யார் உரை, பரிமேலழகர் உரை, பிரயோக விவேகம், கந்த புராணம், தருக்க சங்கிரகம் முதலிய நூல்களை இவர் பிழையற அச்சிட்டு வெளியிட்டனர். இவரது உரைநடை மிகவும் இனிய எளிய நடையில் அமைந்துள்ளது. திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக விளங்கிய சுப்பிரமணிய தேசிகர் ஆறுமுக நாவலரவர்களைப் பாராட்டி அவருக்கு நாவலர் என்ற பட்ட மும் அளித்தனர் என்பர். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த மஹா வித்துவான் - மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர் களைப் பத்தொன்பதாம் நூற்ருண்டின் இணையற்ற பெரும் புலவர் எனக் கூறலாகும். பதினுறு தல புராணங்களையும், பத்துப் பிள்ளைத்தமிழ் நூல்களையும், பதினுறு அந்தாதிகளை யும், நான்கு மாலை நூல்களையும், உலா, கோவை முதலிய பல வேறு நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவர் திருவாவடுதுறை ஆதீனப் புலவராக இருந்தமையால் அந்த ஆதீனத் தலைவர்மீதும் சில நூல்கள் இயற்றியுள்ளார். இவர் இயற்றிய நூல்களுள் பல இவருடைய மாணவர் மகாமகோ பாத்தியாய - டாக்டர் - உ. வே. சாமிநாத ஐயர் அவர்களால் வெளியிடப்பட்டன.

முருகதாச சுவாமிகள்: என்பவர் திருநெல்வேலியில் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர். இவர் முருகன் திருவருள் பெற்றுப் பாடல் இயற்றும் வன்மை பெற்ருர். தண்டபாணி சுவாமிகள் என்றும் திருப்புகழ்ச் சுவாமிகள் என்றும் இவருக்கு வேறு பெயர்கள் உண்டு. இவர் தில்லைத் திருவாயிரம், தெய்வத் திருவாயிரம், ஏழாயிரப் பிரபந்தம் என்னும் துதி நூல்களையும், ஆமாத்தூர்த் தல புராணம், அருணகிரிநாதர் புராணம் என்ற தல புராணங்களையும் இயற்றியுள்ளார். இவர் புலவர் புராணம் என்ற நூலில்

எழுபது புலவர்களின் வரலாற்றினை விளக்கியுள்ளார். வண்ணக் கவிகள் பாடுவதில் இவர் வல்லவர்.

19-ம் நூற்றாண்டில் விளங்கிய பாவலருள் முதல் இடம் பெறத்தக்கவர் இராமலிங்க சுவாமிகள் (1823 - 1874). இவர் 6000க்கு மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்களுக்குத் திருவருட்பா என்பது பெயர். இப்பாடல்கள் அனைத்தும் ஆறு திருமுறைகளாகப் பகுக்கப் பட்டுள்ளன. இவரது பாடல்கள் இனிய எளிய பயின்ற நடையில் அமைந்துள்ளதால் இவைகளைக் கற்றோரன்றி மற்றோரும் பாவலரன்றிப் பாமரரும் படித்து இன்புறுகின்றனர். இவரது குறிக்கோள் எம்மதமும் சம்மதம் எனப்படும் சமரச சன்மார்க்கமாகும். எல்லோரும் ஒரு குலம் எல்லோரும் ஓர் இனம் என்பதையும், சமயச்சண்டை கூடாது என்பதையும் பிற உயிர்களை வருத்துதல் கூடாது என்பதையும், சில சீர் திருத்தக் கொள்கைகளையும் இவர் தம் பாடல் மூலம் நமக்கு அறிவுரை புகட்டியுள்ளார். இவைகளேயன்றி மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் முதலிய உரைநடைப் பகுதியும் இவரால் இயற்றப்பட்டுள்ளன. இவர் சைவசமயாசாரியார் நால்வரைத் தம் குருவாகக் கொண்டுள்ளார் என்பது இவரது பாடல்களால் அறியக்கிடக்கின்றது. மக்கள் சைவ உணவை மேற்கொள்ளல்வேண்டும் என்பதை இராமலிங்க அடிகள் பல பாடல்களில் வற்புறுத்தியுள்ளார். அவற்றுள் ஒரு பாடலை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

“ மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்தில்
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறந்தவரை
எழுப்புகின்ற வுறுவ னேனும்
கருவாணை யுறஇரங்காது உயிர்உடம்பைக்
கடிந்து உண்ணும் கருத்த னேல்எம்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணாதே ”*

*திருவருட்பா - இரண்டாம் திருமுறை - அறநிலை விளக்கம்-II

இராமலிங்க அடிகளாரின் குறிக்கோளினை அறிவதற்குத் துணையாக உள்ள ஒரு பாடலினைக் கூறி என் பேச்சினை முடித்துக்கொள்கின்றேன்.

"அப்பாநான் வேண்டுதல்கேட்டு அருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட்கு எல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநினது அருட்புகழை யியம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கந்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே"†

---

# தேவார வைப்புத்தலங்கள்*

சம்பந்தர் அருளியன (32)

| | | | |
|---|---|---|---|
| 1 | அத்தங்குடி 1893 | | தலை 1888 |
| | அத்தி(கிரி) 1885 | | தேவன்குடி 1893 |
| | *அமராவதி 2877 | | *தேனூர் 664 |
| | அறப்பள்ளி 1887 | 20 | நற்குன்றம் 1892 |
| 5 | இடைப்பள்ளி 1887 | | நெடுவாயில் 1892 |
| | உஞ்சேனைமாகாளம் 1892 | | நெற்குன்றம் 1892 |
| | காட்டூர் 1890 | | பூழியூர் 1891 |
| | காற்றூர் 1891 | | *பொதியில் 546, 853 |
| | குணவாயில் 1890 | 25 | போற்றூர் 1891 |
| 10 | குத்தங்குடி 1893 | | மாட்டூர் 1890 |
| | குருந்தங்குடி 1893 | | *வஞ்சி 2772 |
| | குன்றனூர் 184 | | வண்குடி 1893 |
| | குன்றியூர் 1884 | | *வரந்தை 658 |
| | கூரூர் 1884 | 30 | வாதவூர் 1890 |
| 15 | *கோழி 2772, 2773 | | வாரணசி 1890 |
| | சிறப்பள்ளி 1887 | 32 | வெற்றியூர் 1889 |

†திருவருட்பா-சுத்தசன்மார்க்க வேண்டுகோள் - பாட்டு-1

*குறிப்பிட்ட எண்ணுடைய திரு. ம. பா. பதிப்புத் தேவாரப் பாசுரத்தில் இத்தலம் வருவது காண்க. தல விளக்கம் பின்னர் வரும்.
—தி. கி. நாராயணசாமி நாயடு.

## அப்பர் அருளியன (159)

## சுந்தரர் அருளியன (75)

சொற்பொழிவாற்றினர். சேற்றார் சமஸ்தான வித்வான் - சிவஸ்ரீ சுந்தரேச பட்டர் குழுவினரின் தனி பிடில் கச்சேரியும் நிகழ்ந்தது. இத்தகைய சைவ சித்தாந்த சபைகள் பலப்பல ஆங்காங்குத் தோன்றிச் சைவம் வளரும்படி தொண்டாற்று தற்கு இறையருள் துணை புரிவதாக !

திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம் : 12-ஆம் ஆண்டு நிறைவு விழா, 1960 ஜனவரி 1, 2, 3 தேதிகளில், ஸ்ரீ ஆதிகும்பேசுவர சுவாமி கோயில் திருக்கல்யாண மண்டபத்தில், சித்தாந்த சரபம் - மகாமகோபாத்தியாய-காசி வாசி-சிவத்திரு. ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் அவர்களின் தலைமையில், மூன்று நாட்கள் சிறப்புற நடைபெற்றது. தருமையாதீனம் வித்துவான் - தவத்திரு. இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், கோவை - கவியரசு - கு. நடேச கவுண்டர், பண்டித வித்துவான் - சைவப் புலவர் - திரு. K. சுந்தரமூர்த்தி, பண்டித வித்துவான் - திரு. இராம கோவிந்தசாமி பிள்ளை, ஈரோடு - திரு. அ. ஞானசம்பந்தர், திரு. புலவர் - முருகவேள், அமுதமொழி - திரு. சாமிநாத பிள்ளை, சிவஸ்ரீ சுப்பிரமணிய சிவாச்சாரியார் ஆகிய அறிஞர் பெருமக்கள் பலர் முறையே குருஞானசம்பந்தர், திருத் தொண்டின் உறைப்பு,போற்றியாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்,ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் மாலை, இல்லை உண்டு, குமரகுருபரர் ,ஒரு வாசகம் என்றுணர் என்னும் பொருள் கள் பற்றி விரிவுரை நிகழ்த்தினர். நாச்சியார் கோயில் அநாதை இல்லக் குழந்தைகளால் 'நாவுக்கரசர்' நாடகம் நடிக்கப் பெற்றது. தமது அருமைத் தமையனாரின் அடிச் சுவட்டைப் பின்பற்றித் திரு. P. T. S. சிங்காரம் செட்டியார் அவர்கள் விழா சிறப்புற நிகழப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார்கள். திருவாளர்கள் - முத்த. வெ. சொக்கலிங்கம் செட்டியார், S. சுப்பிரமணிய முதலியார், சு. சிவகுருநாத செட்டியார், மா. அருணசலம் செட்டியார், சுந்தரேசஞ் செட்டியார், B.A., B.T. முதலிய பெருமக்களும் விழாவின் சிறப்பிற்குப் பெரிதும் ஈடுபட்டுழைத்தமை குறிப்பிடற் பாலது.

காந்தி வித்தியாலய மாணுக்கர்

## மாத வழிபாட்டு ஆண்டு விழா

திருச்சிற்றம்பலம் காந்தி வித்தியாலய சீர்திருத்தப் பள்ளிக் குழந்தைகளும், பயிற்சிப் பள்ளி மாணுக்கரும் இங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள பந்தணை நல்லூர் ஸ்ரீ பசுபதீசுவர சுவாமி ஆலயத்திலும் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஆலயத்திலும் பௌர்ணமிக்கு முந்திய பிரதோஷத்தன்று ஒவ்வொரு மாதமும் சென்ற ஒரு ஆண்டு முழுமையும் மாத வழிபாடு செய்து வந்திருக்கிருர்கள். ஆலய நிர்வாக அதிகாரி இவ்வழிபாட்டுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்திருக்கிருர். இந்த வழிபாட்டின் ஆண்டு விழா சென்ற டிசம்பர் மாதம் 12-ந் தேதி பசுபதீசுவரர் ஆலயத்தில், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைமை ஆசிரியர் ஸ்ரீ K. M. வேங்கடராமையா, M.A., B.O.L. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சமயாசாரியர் நால்வருக்குச் சிறப்பாக வழிபாடு நடந்து சுவாமி எழுந்தருளுவித்தலும் நடைபெற்றது. திருப்பனந்தாள் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ வெள்ளை வாரணனுர் அவர்களும், தருமபுரம் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ சொ. சிங்காரவேலனுர் அவர்களும், காந்தி வித்தியாலய நிர்வாகி ஸ்ரீ மு. அருணுசலம், M.A. அவர்களும், முறையே திருமுறைப்பயன், அருள் நெறி, பாசுரங்கள் என்பன பற்றிப் பேசினர்.

குழந்தைகளுடைய திருமுறைப் பாராயணத்துடன் விழா முடிந்தது.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.